بسم الله الرحمن الرحيم

# الأدعية الصحيحة النادرة المعني

# ஆதாரப்பூர்வமான அபூர்வ துஆக்கள்

**முஜாஹித் இப்னு ரஸீன்**

*இஸ்லாமிய அழைப்பாளர்*

*ராக்கா தஃவா நிலையம்*

*தம்மாம் - சவூதி அரேபியா*

*சுவனச்சோலை*

www.suvanacholai.com

بسم الله الرحمن الرحيم

أَبِي هُرَيْرَةَ ﷺ قَالَ  قَالَ النَّبِيُّ صلى الله عليه وسلم " إِذَا أَوَى أَحَدُكُمْ إِلَى فِرَاشِهِ فَلْيَنْفُضْ فِرَاشَهُ بِدَاخِلَةِ إِزَارِهِ ، فَإِنَّهُ لاَ يَدْرِي مَا خَلَفَهُ عَلَيْهِ، ثُمَّ يَقُولُ **بِاسْمِكَ رَبِّ وَضَعْتُ جَنْبِي، وَبِكَ أَرْفَعُهُ، إِنْ أَمْسَكْتَ نَفْسِي فَارْحَمْهَا، وَإِنْ أَرْسَلْتَهَا فَاحْفَظْهَا بِمَا تَحْفَظُ بِهِ عِبَادَكَ الصَّالِحِينَ** "  (صحيح البخاري 6320 )

The Prophet (ﷺ) said, "When anyone of you go to bed, he should shake out his bed with the inside of his waist sheet, for he does not know what has come on to it after him, and then he should say: **'Bismika Rabbi Wada`tu Janbi wa bika arfa'uhu, In amsakta nafsi farhamha wa in arsaltaha fahfazha bima tahfazu bihi ibadakas-salihin**."

*இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்* :

*நீங்கள் படுக்கைக்குச் சென்றால் உங்கள் கீழங்கியின் ஓரத்தால் விரிப்பைத் தட்டி விடுங்கள். ஏனெனில், அதில் என்ன (விஷ ஜந்து) ஒளிந்திருக்கிறது என்பது உங்களுக்குத் தெரியாது. பிறகு (பின்வருமாறு) பிரார்த்தியுங்கள்:*

***பிஸ்மிக்க ரப்பீ வளஅத்து ஜன்பீ. வ பிக்க அர்ஃபஉஹு இன் அம்ஸக்த்த நஃப்ஸீ ஃபர்ஹம்ஹா வ இன் அர்ஸல்த்தஹா ஃபஹ்ஃபழ்ஹா பிமா தஹ்ஃபழு பிஹி இபாதக்கஸ் ஸாலிஹீன்.***

*பொருள்: என் அதிபதியே! உன் பெயரால் என் விலாவை (தரையில்) வைத்தேன். உன் உதவியாலேயே (மீண்டும்) எழுவேன். என் உயிரை நீ கைப்பற்றிக் கொண்டால், அதற்கு நீ கருணை புரிவாயாக. அதை நீ (கைப்பற்றாமல்) விட்டுவிட்டால், உன் நல்லடியார்களை எதன் மூலம் பாதுகாப்பாயோ அதன் மூலம் என் உயிரையும் பாதுகாத்திடுவாயாக*

*என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார். (ஸஹீஹ் புஹாரி 6320)*

*இன்னும் சில அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இந்த நபிமொழி வந்துள்ளது.*

أَبِي بَكْرٍ الصِّدِّيقِ ﷺ . أَنَّهُ قَالَ لِلنَّبِيِّ صلى الله عليه وسلم عَلِّمْنِي دُعَاءً أَدْعُو بِهِ فِي صَلاَتِي. قَالَ " **قُلِ اللَّهُمَّ إِنِّي ظَلَمْتُ نَفْسِي ظُلْمًا كَثِيرًا، وَلاَ يَغْفِرُ الذُّنُوبَ إِلاَّ أَنْتَ، فَاغْفِرْ لِي مَغْفِرَةً مِنْ عِنْدِكَ، وَارْحَمْنِي، إِنَّكَ أَنْتَ الْغَفُورُ الرَّحِيمُ** " . (صحيح البخاري 6326 )

أَنَّهُ سَمِعَ عَبْدَ اللَّهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ ﷺ ، يَقُولُ إِنَّ أَبَا بَكْرٍ الصِّدِّيقَ قَالَ لِرَسُولِ اللَّهِ صلى الله عليه وسلم عَلِّمْنِي يَا رَسُولَ اللَّهِ دُعَاءً أَدْعُو بِهِ **فِي صَلاَتِي وَفِي بَيْتِي** . ( صحيح مسلم 2705 )

Abu Bakr As-Siddiq said to the Prophet, "Teach me an invocation with which I may invoke (Allah) in my prayer." The Prophet (ﷺ) said, "Say: **Allahumma inni zalamtu nafsi zulman kathiran wala yaghfirudhdhunuba illa anta**, **Faghfirli maghfiratan min indika war-hamni**, **innaka antalGhafur-Rahim**." (Sahih al-Bukhari 6326)

Abu Bakr Siddiq said to Allah's Messenger (ﷺ) Allah's Messenger, teach me a supplication which I should make **in my prayer and in my house**. (Sahih Muslim 2705)

*அபூபக்ர் அஸ்ஸித்தீக் (ரலி) அறிவித்தார்.*

*தொழுகையில் (இறுதி அமர்வில்) நான் ஓதவேண்டிய ஒரு பிரார்த்தனையை எனக்கக் கற்றுத் தாருங்கள்’ என்று நபி(ஸல்) அவர்களிடம் கேட்டேன். அப்போது* ***’அல்லாஹும்ம இன்னீ ழலம்த்து நஃப்ஸீ ழுல்மன் கஸீரன். வலா யஃக்ஃபிருத் துனூப இல்லா அன்த்த. ஃபஃக்ஃபிர்லீ மஃஹ்பிரத்தம் மின் இந்திக்க வர்ஹம்னீ. இன்னக்க அன்த்தல் ஃகஃபூருர் ரஹீம்’*** *என்று கூறுங்கள் என்று நபி(ஸல்) அவர்கள் சொன்னார்கள்.*

*பொருள்: இறைவா! எனக்கு நானே அதிகமாக அநீதி இழைத்துக் கொண்டேன். உன்னைத் தவிர வேறெவராலும் பாவங்களை மன்னிக்க முடியாது. எனவே, உன்னிடமிருந்து எனக்கு மன்னிப்பு வழங்குவாயாக! மேலும், எனக்குக் கருணை புரிவாயாக! நிச்சயமாக நீ மன்னிப்பவனும் கருணையாளனுமாவாய். (ஸஹீஹ் புஹாரி - 6326)*

*மேற்கண்ட ஹதீஸ் அபூபக்ர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில், ‘நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம்,* ***‘அல்லாஹ்வின் தூதரே! நான் எனது தொழுகையிலும் எனது இல்லத்திலும் பிரார்த்திக்க ஒரு பிரார்த்தனையைக் கற்றுத்தாருங்கள்‘*** *என்று கேட்டேன்‘ என ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன. ( ஸஹீஹ் முஸ்லிம் 5241 )*

عَنْ فَرْوَةَ بْنِ نَوْفَلٍ الأَشْجَعِيِّ، قَالَ سَأَلْتُ عَائِشَةَ رضى الله عنها عَمَّا كَانَ رَسُولُ اللَّهِ صلى الله عليه وسلم يَدْعُو بِهِ اللَّهَ قَالَتْ كَانَ يَقُولُ " **اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنْ شَرِّ مَا عَمِلْتُ وَمِنْ شَرِّ مَا لَمْ أَعْمَلْ** " .

( صحيح مسلم 2716 )

Farwa' b. Naufal reported: I asked: 'A'isha, in what words did Allah's Messenger (ﷺ) supplicate Allah? She said that he used to utter:" **I seek refuge in Thee from the evil of what I did and from the evil of what I did not**." (Sahih Muslim 2716)

*ஃபர்வா பின் நவ்ஃபல் அல்அஷ்ஜஈ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:*

*நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அல்லாஹ்விடம் வேண்டிவந்த பிரார்த்தனைகள் குறித்துக் கேட்டேன். ஆயிஷா (ரலி) அவர்கள், '**அல்லாஹும்ம! இன்னீ அஊது பிக்க மின் ஷர்ரி மா அமில்த்து, வ மின் ஷர்ரி மா லம் அஃமல்**' என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பிரார்த்திப்பார்கள் எனப் பதிலளித்தார்கள்.*

*பொருள்: இறைவா! நான் செய்தவற்றின் தீங்கிலிருந்தும் நான் செய்யத் தவறியவற்றின் தீங்கிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன்.*
*( ஸஹீஹ் முஸ்லிம் 5259 )*

عَنِ الْبَرَاءِ بْنِ عَازِبٍ ﷺ ، أَنَّ رَسُولَ اللَّهِ صلى الله عليه وسلم أَمَرَ رَجُلاً إِذَا أَخَذَ مَضْجَعَهُ مِنَ اللَّيْلِ أَنْ يَقُولَ " **اللَّهُمَّ أَسْلَمْتُ نَفْسِي إِلَيْكَ وَوَجَّهْتُ وَجْهِي إِلَيْكَ وَأَلْجَأْتُ ظَهْرِي إِلَيْكَ وَفَوَّضْتُ أَمْرِي إِلَيْكَ رَغْبَةً وَرَهْبَةً إِلَيْكَ لاَ مَلْجَأَ وَلاَ مَنْجَا مِنْكَ إِلاَّ إِلَيْكَ آمَنْتُ بِكِتَابِكَ الَّذِي أَنْزَلْتَ وَبِرَسُولِكَ الَّذِي أَرْسَلْتَ** . فَإِنْ مَاتَ مَاتَ عَلَى الْفِطْرَةِ " . ( صحيح مسلم 2710 )

Al-Bara' b. 'Azib reported that Allah's Messenger (in may peace be upon him) commanded a person (in these words): When you go to bed during night, you should say:" **O Allah, I surrender myself to Thee and entrust my affair to Thee, with hope in Thee and fear of Thee. There is no resort and no deliverer (from hardship but Thou). I affirm my faith in the Book which Thou revealed and in the Messengers whom Thou sent**." If you die in this state you would die on Fitra, (Sahih Muslim 2710)

*பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:*

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு மனிதரிடம், நீ இரவில் படுக்கைக்கு (உறங்க)ச் செல்லும்போது, '**அல்லாஹும்ம! அஸ்லம்த்து நஃப் ஸீ இலைக்க, வ வஜ்ஜஹ்த்து வஜ்ஹீ இலைக்க, வ அல்ஜஃத்து ழஹ்ரீ இலைக்க, வ ஃபவ்வள்த்து அம்ரீ இலைக்க; ரஃக்பத்தன் வ ரஹ்பத்தன் இலைக்க. லா மல்ஜஅ வலா மன்ஜா மின்க்க இல்லா இலைக்க, ஆமன்த்து பி கித்தாபிக்கல்லதீ அன்ஸல்த்த வபி ரசூலிக்கல்லதீ அர்சல்த்த**' என்று சொல்லும்படி உத்தரவிட்டார்கள்.*

*'அவர் (இவ்வாறு பிரார்த்தித்துவிட்டு உறங்கும்போது) இறந்துவிட்டால் (இஸ்லாம் எனும்) இயற்கை மரபில் இறந்தவராவார்' என்றும் கூறினார்கள். ( ஸஹீஹ் முஸ்லிம் 5250 )*

*பொருள்: இறைவா! என்னை நான் உன்னிடம் ஒப்படைத்தேன். என் முகத்தை உன்னளவில் திருப்பிவிட்டேன். எனது முதுகை உன்னளவில் சாய்த்துவிட்டேன். என் காரியங்கள் அனைத்தையும் உன்னிடம் ஒப்படைத்துவிட்டேன். உன்மீதுள்ள அன்பிலும் அச்சத்திலும்தான் (இவற்றை நான் செய்தேன்). உன்னிடமிருந்து தப்பிக்கவும் ஒதுங்கிடவும் உன்னைத் தவிர வேறு போக்கிடம் இல்லை. நீ அருளிய உன்னுடைய வேதத்தையும் நீ அனுப்பிய உன் ரசூலையும் நான் நம்பினேன்.*

عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ ، أَنَّ النَّبِيَّ صلى الله عليه وسلم كَانَ إِذَا كَانَ فِي سَفَرٍ وَأَسْحَرَ يَقُولُ " **سَمَّعَ سَامِعٌ بِحَمْدِ اللَّهِ وَحُسْنِ بَلاَئِهِ عَلَيْنَا رَبَّنَا صَاحِبْنَا وَأَفْضِلْ عَلَيْنَا عَائِذًا بِاللَّهِ مِنَ النَّارِ** " . ( صحيح مسلم 2718 )

Abu Huraira reported that when Allah's Messenger (ﷺ) set out on a journey in the morning, he used to say: " **A listener listened to our praising Allah (for) His goodly trial of us. Our Lord! acompany us, guard us and bestow upon us Thy grace. I am seeker of refuge in Allah from the Fire**." ( Sahih Muslim 2718 )

*அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:*

*நபி (ஸல்) அவர்கள் பயணத்தில் இருந்து, அதிகாலை முன்நேரத்தை அடைந்தால்,*

***‘ஸமிஅ ஸாமிஉன் பி ஹம்தில்லாஹி , வ ஹுஸ்னி பலாயிஹி அலைனா, ரப்பனா ஸாஹிப்னா, வ அஃப்ளில் அலைனா, ஆயிதம் பில்லாஹி மினந் நார்‘***

*என்று பிரார்த்திப்பார்கள். ( ஸஹீஹ் முஸ்லிம் 5262 )*

*பொருள்: அல்லாஹ் நமக்குப் புரிந்த நல்லுபகாரத்திற்காக அவனை நாம் போற்றிப் புகழ்வதைக் கேட்பவர் கேட்டுவிட்டார். (அல்லது கேட்பவர் பிறருக்கு எடுத்துரைக்கட்டும்.) எங்கள் இரட்சகா! எங்களுடன் வருவாயாக! எங்கள்மீது கருணை பொழிவாயாக! நரக நெருப்பிலிருந்து காப்பாயாக!*

عَنْ أَنَسٍ ﷺ ، أَنَّ رَسُولَ اللَّهِ صلى الله عليه وسلم كَانَ إِذَا أَوَى إِلَى فِرَاشِهِ قَالَ

**الْحَمْدُ لِلَّهِ الَّذِي أَطْعَمَنَا وَسَقَانَا وَكَفَانَا وَآوَانَا فَكَمْ مِمَّنْ لاَ كَافِيَ لَهُ وَلاَ مُئْوِيَ**

( صحيح مسلم 2715 )

Anas reported Allah's Messenger (ﷺ) as saying:
When you go to bed, say: " **Praise is due to Allah Who fed us**, **provided us drink**, **sufficed us and provided us with shelter**, **for many a people there is none to suffice and none to provide shelter**." ( Sahih Muslim 2715 )

*அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:*

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் படுக்கைக்குச் செல்லும்போது* ***'அல்ஹம்து லில்லாஹில்லதீ அத்அமனா வ சகானா வ கஃபானா வ ஆவானா. ஃபகம் மிம்மன் லா காஃபிய லஹூ, வலா முஃவிய'*** *என்று கூறுவார்கள். ( ஸஹீஹ் முஸ்லிம் 5258 )*

*பொருள்: அனைத்துப் புகழும் அல்லாஹ்வுக்கே உரியது. அவனே நமக்கு உணவளித்தான்; குடிநீர் வழங்கினான்; (நம் தேவைகளை நிறைவேற்றி) போதுமான அளவுக்குக் கொடுத்தான்; (தங்க இடமளித்து) தஞ்சமளித்தான். ஆனால், போதுமாக்கிவைப்பதற்கோ தஞ்சமளிப்பதற்கோ ஆளில்லாமல் எத்தனையோ பேர் இருக்கின்றனர்.*

عَنْ أَبِي مُوسَى الأَشْعَرِيِّ ، عَنِ النَّبِيِّ صلى الله عليه وسلم أَنَّهُ كَانَ يَدْعُو "
**اللَّهُمَّ اغْفِرْ لِي خَطِيئَتِي وَجَهْلِي وَإِسْرَافِي فِي أَمْرِي، وَمَا أَنْتَ أَعْلَمُ بِهِ مِنِّي، اللَّهُمَّ اغْفِرْ لِي هَزْلِي وَجِدِّي وَخَطَاىَ وَعَمْدِي، وَكُلُّ ذَلِكَ عِنْدِي** "(صحيح البخاري 6399 )

Narrated Abu Musa Al-Ash`ari:

The Prophet (ﷺ) used to invoke Allah, saying, "**Allahumma ighfirli khati'ati wa jahli wa israfi fi `Amri, wa ma anta a-'lamu bihi minni. Allahumma ighfirli hazali wa jiddi wa khata'i wa amdi, wa kullu dhalika 'indi**." ( Sahih al-Bukhari 6399 )

*அபூ மூஸா அல் அஷ்அரீ(ரஹ்) அவர்கள்கூறினார்:*

*நபி(ஸல்) அவர்கள் (பின்வருமாறு) பிரார்த்தித்துவந்தார்கள்.*

***அல்லாஹும்ம ஃக்ஃபிர்லீ கத்தீஅத்தீ, வ ஜஹ்லீ, வ இஸ்ராஃபீ ஃபீ அம்ரீ, வமா அன்த்த அஃலமு பிஹி மின்னீ, அல்லாஹும்மஃக்ஃபிர் லீ ஹஸ்லீ, வ ஜித்தீ, வ ஃகத்தாயாயீ வ அம்தீ, வ குல்லு தாலிக்க இந்தீ.*** *(ஸஹீஹ் புஹாரி 6399)*

*பொருள்: இறைவா! என் குற்றங்களையும் என் அறியாமையையும், என் செயல்களில் நான் மேற்கொண்ட விரயத்தையும், மேலும், என்னை விட நீ எவற்றையெல்லாம் அறிந்துள்ளாயோ அவற்றையும் மன்னித்திடுவாயாக! இறைவா! நான் விளையாட்டாகச் செய்ததையும், வினையாகச் செய்ததையும், தவறுதலாகச் செய்ததையும், வேண்டுமென்றே செய்ததையும் மன்னித்திடுவாயாக! இவையாவும் என்னிடம் இல்லாமலில்லை.*

عَنْ عَلِيٍّ ﷺ ، قَالَ قَالَ لِي رَسُولُ اللَّهِ صلى الله عليه وسلم " قُلِ **اللَّهُمَّ اهْدِنِي وَسَدِّدْنِي** ( صحيح مسلم 2725 )

Ali reported that Allah's Messenger (ﷺ) said to him: Say," **O Allah, direct me to the right path and make me adhere to the straight path**," (Sahih Muslim 2725)

*அலீ (ரலி) அவர்கள் கூறியதாவது:*

*என்னிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்,*

***'அல்லாஹும்மஹ்தினீ, வ ஸத்தித்னீ'***

*இறைவா! எனக்கு நல்வழி காட்டுவாயாக! நேர்மையானதைச் சரியாகச் செய்ய எனக்கு வாய்ப்பளிப்பாயாக!) என்று பிரார்த்திப்பீராக. (ஸஹீஹ் முஸ்லிம் 5271)*

عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ ، أَنَّ النَّبِيَّ صلى الله عليه وسلم كَانَ يَتَعَوَّذُ مِنْ سُوءِ الْقَضَاءِ وَمِنْ دَرَكِ الشَّقَاءِ وَمِنْ شَمَاتَةِ الأَعْدَاءِ وَمِنْ جَهْدِ الْبَلاَءِ . قَالَ عَمْرٌو فِي حَدِيثِهِ قَالَ سُفْيَانُ أَشُكُّ أَنِّي زِدْتُ وَاحِدَةً مِنْهَا .( صحيح مسلم 2707 )

**اللَّهُمَّ إِنِّي أَعُوذُبِكَ مِنْ جَهْدِ الْبَلاءِ ، وَدَرَكِ الشَّقَاءِ ، وَسُوءِ الْقَضَاءِ ، وَشَمَاتَةِ الأَعْدَاءِ**

Abu Huraira that : Allah's Apostle (ﷺ ) used to seek refuge ( in Allah ) from the evil of what has been decreed, from misery, from the mockery of ( triumphant ) enemies, and from severe calamity. (Sahih Muslim 2707)

Amr (one of the narrators) said in his narration: "Sufyan said: 'I fear I may have added one of them (the phrases)."

**O Allah, I seek your refuge from the difficult moment of a calamity and from being overtaken by destruction, and from being destined to an evil end, and from the malicious joy of enemies**

*அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:*

*நபி (ஸல்) அவர்கள் விதியின் கேடு, அழிவில் வீழ்வது, எதிரிகள் (கைகொட்டிச்) சிரிக்கும் நிலைக்கு ஆளாவது, தாங்க முடியாத சோதனை ஆகியவற்றிலிருந்து (இறைவனிடம்) பாதுகாப்புக் கோரிவந்தார்கள்.*

*இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.*

*அவற்றில் அம்ர் அந்நாஷித் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் காணப்படுகிறது: 'இந்த நான்கில் ஒன்றை நான்தான் கூடுதலாக அறிவித்துவிட்டேனோ என்று சந்தேகப்படுகிறேன்' என சுஃப்யான் பின் உயைனா (ரஹ்) அவர்கள் கூறினார்கள். ( ஸஹீஹ் முஸ்லிம் 5246 )*

***அல்லாஹும்ம இன்னீ அஊதுபிக்க மின் ஜஹ்தில் பலாஃ , வ தர்கிஷ் ஷக்காஃ , வ ஸூஇல் கழாஃ , வ ஷமாத்தத்தில் அஃதாஃ ...***

أَبُو مَالِكٍ الأَشْجَعِيُّ، عَنْ أَبِيهِ، قَالَ كَانَ الرَّجُلُ إِذَا أَسْلَمَ عَلَّمَهُ النَّبِيُّ صلى الله عليه وسلم الصَّلاَةَ ثُمَّ أَمَرَهُ أَنْ يَدْعُوَ بِهَؤُلاَءِ الْكَلِمَاتِ " **اللَّهُمَّ اغْفِرْ لِي وَارْحَمْنِي وَاهْدِنِي وَعَافِنِي وَارْزُقْنِي** " ( صحيح مسلم 2697 )

Abu Malik reported on the authority of his father that when a person embraced Islam, Allah's Messenger (ﷺ) used to teach him how to observe prayer and then commanded him to supplicate in these words:

" **O Allah**, **grant me pardon**, **have mercy upon me**, **direct me to the path of righteousness**, **grant me protection and provide me sustenance**."
(Sahih Muslim 2697)

*தாரிக் பின் அஷ்யம் (ரலி) அவர்கள் கூறியதாவது:*

*ஒருவர் புதிதாக இஸ்லாத்தைத் தழுவினால், அவருக்கு நபி (ஸல்) அவர்கள் தொழுகையைக் கற்றுக்கொடுப்பார்கள். பிறகு*

***'அல்லஹுஉம்மஃக்பிர்லீ வர்ஹம்னீ வஹ்தினீ வ ஆஃபினீ வர்ஸுஉக்னீ'***

*எனும் இந்த வாக்கியங்களைச் சொல்லிப் பிரார்த்திக்கும்படி கட்டளையிடுவார்கள்.*

*பொருள்: இறைவா! என்னை மன்னிப்பாயாக! எனக்குக் கருணை புரிவாயாக! என்னை நல்வழியில் செலுத்துவாயாக! எனக்கு ஆரோக்கியத்தை வழங்குவாயாக! எனக்கு வாழ்வாதாரத்தை வழங்குவாயாக! ( ஸஹீஹ் முஸ்லிம் 5228 )*

عَنْ مُصْعَبِ بْنِ سَعْدٍ ، عَنْ أَبِيهِ ، قَالَ تَعَوَّذُوا بِكَلِمَاتٍ كَانَ النَّبِيُّ صلى الله عليه وسلم يَتَعَوَّذُ بِهِنَّ **" اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنَ الْجُبْنِ، وَأَعُوذُ بِكَ مِنَ الْبُخْلِ، وَأَعُوذُ بِكَ مِنْ أَنْ أُرَدَّ إِلَى أَرْذَلِ الْعُمُرِ، وَأَعُوذُ بِكَ مِنْ فِتْنَةِ الدُّنْيَا، وَعَذَابِ الْقَبْرِ "**. (صحيح البخاري 6320 )

Narrated Mus'ab bin Sa`di: Seek refuge with Allah by saying the words which the Prophet (ﷺ) used to say while seeking refuge with Allah, "**0 Allah! I seek refuge with You from cowardice, and seek refuge with You from miserliness, and seek refuge with You from reaching a degraded geriatric old age, and seek refuge with You from the afflictions of the world and from the punishment in the grave**." (Sahih al-Bukhari 6374)

*ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அறிவித்தார்.*

*நபி(ஸல்) அவர்கள் எந்த வார்த்தைகளால் பாதுகாப்புக் கோரிவந்தார்களோ அவற்றைக் கூறி நீங்களும் பாதுகாப்புக் கோருங்கள். (அவை:)*

***அல்லாஹும்ம இன்னீ அஊது பிக்க மினல் ஜுப்னி, வ அஊது பிக்க மினல் புஃக்லி, வ அஊது பிக்க மின் அன் உரத்த இலா அர்தலில் உமுரி, வ அஊது பிக்க மின் ஃபித்னத்தித் துன்யா, வ அதாபில் கப்ரி.***

*பொருள்: இறைவா! கோழைத்தனத்திலிருந்து உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன். கருமினத்திலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன். நான் தள்ளாத வயதுக்குத் தள்ளப்படுவதிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன். மேலும், இம்மையின் சோதனையிலிருந்தும் மண்ணறையின் வேதனையிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன். (ஸஹீஹ் புஹாரி* 6374*)*

عَنْ أَنَسٍ ـ رضى الله عنه ـ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ صلى الله عليه وسلم " لاَ يَتَمَنَّيَنَّ أَحَدٌ مِنْكُمُ الْمَوْتَ لِضُرٍّ نَزَلَ بِهِ، فَإِنْ كَانَ لاَ بُدَّ مُتَمَنِّيًا لِلْمَوْتِ فَلْيَقُلِ **اللَّهُمَّ أَحْيِنِي مَا كَانَتِ الْحَيَاةُ خَيْرًا لِي، وَتَوَفَّنِي إِذَا كَانَتِ الْوَفَاةُ خَيْرًا لِي** ".(صحيح البخاري 6351 )

Narrated Anas: Allah's Messenger (ﷺ) said," None of you should long for death because of a calamity that had befallen him, and if he cannot, but long for death, then he should say, **'O Allah! Let me live as long as life is better for me, and take my life if death is better for me.'** " ( Sahih al-Bukhari 6351 )

*அனஸ்(ரலி) அறிவித்தார் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'*

*உங்களில் எவரும் தமக்க நேர்ந்த ஒரு துன்பத்தின் காரணத்தினால் மரணத்தை விரும்ப வேண்டாம். அவ்வாறு மரணத்தை விரும்பித்தான் ஆகவேண்டும் என்றிருந்தால்,*

***அல்லாஹும்ம அஹ்யினீ மா கானத்தில் ஹயாத்து ஹைரன்லீ, வ தவஃப்ஃபனீ இதா கானத்தில் வஃபாத்து ஹைரன்லீ***

*'இறைவா! (நான்) உயிர்வாழ்வது எனக்கு நன்மையாக இருப்பின், என்னை உயிர்வாழச் செய்வாயாக! நான் இறந்துவிடுவதே எனக்கு நன்மையாக இருப்பின், எனக்கு இறப்பைத் தருவாயாக!' என்று கேட்கட்டும். (ஸஹீஹ் புஹாரி 6351.)*

❄❄❄❄❄❄